23rd September 1961]

* **SRI S. M. ANNAMALAI :** சென்னை, செங்கற்பட்டு, வட ஆற்காடு இம்மூன்று மாவட்டங்களுக்கும் சேர்ந்து ஒரு பிரசார வான் தான் இருக்கிறது. ஆகவே அது நல்லமுறையில் பயன்படுத்தப்படவில்லை. ஆகவே அதை அதிகரிக்கவேண்டுமென்று டிஸ்ட்ரிக்ட் ப்ரொஹிபிஷன் கமிட்டிக் கூட்டத்திலிருந்து ரெஸல்யூஷன் அனுப்பியுள்ளார்கள், ஆகவே இதைக் கவனித்து, உடனடியாக ஒரு வான் அனுப்ப முயற்சி எடுக்கப்படுமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** எனது அபிப்பிராயம் இனி பிரசாரத்திற்கு அவசியமில்லை என்பது. மதுவிலக்கு அமுலுக்கு வந்து ரொம்ப நாளாகிவிட்டது. அதை அமுல் படுத்தவேண்டும் அதற்கு பொது மக்களின் ஆதரவை பெறவேண்டும். தவிர, பிரசாரம் வேண்டியதில்லை என்பதுதான் என் அபிப்பிராயம்.

### *Prohibition Offences*

* **1751 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு மாவட்டத்தில் அதிகமாக மதுவிலக்குச் சட்டத்தை மீறிய குற்றங்கள் இல்லாத கிராமங்களுக்கு பரிசுகள் வழங்க எத்தனை கிராமங்களை சிபார்சு செய்யப்பட்டது ?

(இ) அதன்மீது சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) No recommendation has been received by the Government for the award of prizes to villages in North Arcot District for minimum number of offences against the Prohibition Act.

(ஆ) Does not arise.

### *Lignite and iron ore—Despatch to Germany for testing*

* 1752 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) when the required quantity of lignite is expected to be despatched to Germany for conducting the test; and

(*b*) whether the despatch of iron ore from Salem has been completed?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The Government have already taken on hand the collection, packing and despatch of the lignite required for the tests. Its shipment to East Germany is expected to be completed by the next month.

(*b*) The despatch of iron ore from Salem for the tests at the National Metallurgical Laboratory has been completed. The despatch of ore for tests abroad is expected to be completed next month.

**SRI M. KALYANASUNDARAM :** லிக்னைட், இரும்புக்கனி அனுப்பப்பட்டு பரீட்சை முடிந்து ரிபோர்ட்கள் கிடைக்க எவ்வளவு காலமாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** எவ்வளவு காலமாகும் என்று நிர்ணயித்துச் சொல்வதற்கில்லை.